REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812313 4 பக்கம் விலை 35 காசு

**இலட்சியம்**

ஏழையின் காலில் ஒட்டிக் கொண்டிருக்கும் சேறு சந்தன மாக மாறவேண்டு மென்பது என் இலட்சியம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**தண்டனை**

உண்மை பேசுவதற்காக தூக்குதண்டனை தான்கிடைக்கும் என்றால் அதனின்றும் சாத்துக்கொள்ள நாம் ஏன் முயற்சிக்கவேண்டும்?

-அண்ணல் காந்தி

மலர்: 4 சென்னை 16-2-1980 சனி (★) ❋ ● ❋ (★) வெளியூர் 17-2-1980 ஞாயிறு இதழ் 99

## கழக அரசை எதிர்த்து திமுக நடத்திய

# ஊர்வலம் படுதோல்வி

## 'இத்தனை செய்தும் எதிர்பார்த்த கூட்டம் இல்லையே'- கருணாநிதி வேதனை

**சென்னை, பிப். 16- புரட்சித்தலைவர் அரசின்மீது 'ஊழல்' புகார் கூறி கவர்னரிடம் மகஜர் கொடுக்க கருணாநிதி நேற்று நடத்திய ஊர்வலம் படுதோல்வியடைந்தது. எதிர்பார்த்த அளவுக்கு ஆட்கள் வராததால் ஏமாற்றமடைந்தார் கருணாநிதி.**

புரட்சித்தலைவர் அரசு மீது புகார்கள் அடங்கிய மகஜரை ஊர்வலமாகச் சென்று கவர்னரிடம் தரப்போவதாக தி. மு. க. வும், இந்திரா காங்கிரசும், முஸ்லிம் லீகும் முடிவெடுத்தது தெரிந்ததே.

இந்த ஊர்வலம் பிரம்மாண்டமான முறையில் அமையவேண்டுமென எதிர்பார்த்து கடந்த ஒரு வார காலமாக தி. மு. க. வேலை செய்தது. இதற்காக ஏராளமான பணமும் செலவிடப்பட்டதாகத் தெரிகிறது.

வெளியூர்களிலிருந்தும், மாவட்டங்களிலிருந்தும் ஏராளமான அளவுக்கு பஸ்களிலும், லாரிகளிலும் அவர்களைக்கொண்டு வர ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆனால் வெளிமாவட்டங்களிலிருந்து ஐநூறு பேர்களே சென்னை வந்தனராம். வெளிமாநிலத்தார் யாரும் வராததால், அதிர்ச்சியடைந்த கருணாநிதி தாமாகவே முந்திக்கொண்டு வெளியூர்களிலிருந்து பஸ்கள் வரவேண்டாம் என்றும் இது நடை ஊர்வலம்தான் என்றும் அறிக்கை விடச் செய்தார்.

### புலியைப் பார்த்து...

நேற்று நடந்த ஊர்வலத்தில் எதிர்பார்த்த அளவுக்குக் கூட்டம் இல்லை. ஊர்வலத்தில் வந்தவர்களை வேடிக்கை பார்க்கக் கூடிய மக்களும் எதிர்பார்த்த அளவுக்கு இல்லை. இதனால் கருணாநிதி மிகவும் ஏமாற்றமடைந்தார்.

கருணாநிதி ஆட்சி மீது ஊழல் புகார்கள் அடங்கிய மகஜரை கவர்னரிடம் கொடுக்க புரட்சித்தலைவர் முன்பு நடத்திய ஊர்வலத்தைபோல இந்த ஊர்வலம் இருக்க வேண்டும் என்று விரும்பித்தான் கருணாநிதி எவ்வளவோ ஏற்பாடுகளைச் செய்தார். ஆனால் பாவம் புலியைப்பார்த்து பூனை சூடு போட்டுக்கொண்ட கதையாகத்தான் ஆகிவிட்டது.

ஊர்வலத்தில் மொத்தம் சுமார் 30 ஆயிரம் பேரே வந்தனர்.

ஆனால் தனது ஏட்டிலும் தனது ஆதரவு ஏட்டிலும் 5 லட்சம் பேர், 10 லட்சம் பேர் வந்ததாக பொய்ச் செய்தியை வெளியிட ஏற்பாடு செய்து சென்னையில் தமது கட்சிக்கு பெரும் செல்வாக்கு இருப்பதுபோன்ற ஒரு பிரமையை ஏற்படுத்த முனைந்திருக்கிறார் கருணாநிதி.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

பொறுப்பாளி, இந்தசட்டமன்ற உறுப்பினர்களுடைய தலைவர், எங்கள் ஆளுங்கட்சியினர், முதலமைச்சர் மற்றும் அமைச்சர்களாகிய நாங்கள் எல்லோரும் தான என்பதைச் சொல்லிக் கொள்கிறேன். அந்த மாதிரி நான் எனக்கு மனதார சரிஎன்று எது என் மனதிற்குப் படுகிறதோ, அதைத் தான் பதிலில் சொல்கிறேன். எங்களுக்கு மனதார சரி என்று எது பட்டதோ அதைத்தான் நான் இங்கே எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதுவே, மற்ற எல்லோருக்கும் சரி என்று படுமானால், அதைத்தான் நாம் கொண்டு வருகிறோம்

இவ்வாறு எஸ். டி. எஸ். பேசினார்.

## சூரிய கிரகணம்: மக்கள் ஆர்வம்

**சென்னை, பிப் 16- சூரிய கிரகணத்தைப் பற்றி விஞ்ஞானிகளும் வானவியல் நிபுணர்களும் அடுக்கடுக்காக அறிவித்த அறிவிப்புகள் தொடர்பாக அச்சம் ஒருபக்கம் இருந்தாலும் மக்கள் சூரிய கிரகணத்தைக் காண வேண்டுமென்ற பேரார்வத்துடன் உள்ளனர்.**

சனிக்கிழமை சூரியகிரகணம் வருவதன் காரணமாக சென்னையில் பருவநிலையில் மாற்றம் இருக்கும், மப்பும் மந்தாரமாக இருக்கும் என்று பருவநிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்தது.

இதனால் தெளிவாக சூரிய கிரகணத்தைப் பார்க்க முடியாமல் போகுமோ என்று ஏமாற்றத்தோடு மக்கள் இருந்தனர்.

ஆனால், காலையிலிருந்து மப்பும் மந்தாரமுமாக இல்லாமல் வானம் தெளிவாக இருக்கிறது. இதன் காரணமாக சூரிய கிரகணத்தைத் தெளிவாகப் பார்க்கலாம் என்று மக்கள் மகிழ்ச்சியுடன் உள்ளனர்.

இன்று காலையிலிருந்து சென்னை நகரில் வழக்கமான பரபரப்பு மக்களிடம் காணப்படவில்லை.

பல இடங்களில்போக்குவரத்து குறைந்து காணப்பட்டது. மதியம் 1 மணிக்கு மேல் தெருக்களில் மக்கள் அதிகமாக நடமாடவே இல்லை.

சூரிய கிரகணத்தைக் காண வேண்டும் என்கின்ற துடிப்பு இருந்தாலும், கண் போய்விடுமே என்ற பயத்தின் காரணமாக பலர் தங்கள் தங்கள் வீடுகளிலேயே இருந்தது தான் இதற்குக் காரணம்.

இந்தச் சூரிய கிரகணம் 82 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியாவில் ஏற்படுகிறது என்பதால் இதற்கு இத்தனை முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது.

கிரகண நேரத்தில் போக்குவரத்துகள் ரத்து செய்யப்பட்டு விட்டன. திரையரங்குகளில் பகல் காட்சிகள் ரத்து செய்யப்பட்டுவிட்டன.

இந்த நூற்றாண்டில் ஏற்படும் முதல சூரியகிரகணமான இதைக்குறித்து 500 விஞ்ஞானிகள் ஆய்வு நடத்தினா.

இந்தியாவின் கிழக்கு கடற்கரை ஓரத்தில் பிற்பகல் 3-38க்கு

(6-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

தெரிய ஆரம்பித்த சூரிய கிரகணம் 17 நிமிடம் 39 விநாடிகள் கழித்து இந்தியாவிலிருந்து அகன்று கிழக்கே செல்லும்.

சூரிய கிரகணம் முழுவதும் ஏற்படும் பாதையில் 15 இடங்களில் விஞ்ஞானிகள் கூடியிருக்கின்றனர்.

சென்னையில் பிற்பகல் 2.05 மணியிலிருந்து 4-36 மணி வரை மின்சார ரயில் போக்குவரத்துகள் நிறுத்தப்பட்டன. சென்ட்ரல் ரயில் நிலையத்திலும், எழும்பூர் ரயில் நிலையத்திலும் மதியம் புறப்படும் ரயில்கள் ரத்து செய்யப்பட்டன.

வெளியில் சென்றுசூரிய கிரகணத்தைப் பார்த்து தொல்லைக்கு ஆளாகாமல் தடுக்க தொலைக் காட்சியில் சூரியகிரகணம் காண்பிக்கப்பட்டது.

### இதோ இன்னொரு 'கப்பல் பாணி' ஊழல்புகார்:

# தங்காத இடத்தில்-பேசாத போனில் ரூ. 9000 'ஊழல்': தி.மு.க. புகார் தவிடுபொடி

**சென்னை, பிப். 16- வாங்காத கப்பலுக்கு-தாராத பணத்தில் ஊழல் நடந்துவிட்டது என்று தி. மு. க. வினர் கூறித் திரிவது தெரிந்ததே. இதே பாணியில் இன்னொரு புகாரையும் மேலவையில் அவர்கள் கூறினார்கள்.**

**நிதியமைச்சரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்சென்ட், கன்னியாகுமரி 'கெஸ்ட் ஹவுசில்' தங்கி போன் செய்த வகையில் 9 ஆயிரம் ரூபாய் ஊழல் நடந்துள்ளது என்ற தி. மு. க. வின் புகாரை தனது பதில் மூலம் தவிடு பொடியாக்கினார் நாஞ்சிலார்.**

தமிழக சட்டமன்ற மேலவையில் ஆளுநர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை கழக உறுப்பினர் டாக்டர் ஜனார்த்தனம் முன்மொழிந்து பேசினார். பிறகு உறுப்பினர்கள் விவாதத்தில் கலந்து கொண்டு பேசினார்கள்.

உறுப்பினர்களின் விவாதங்களுக்குத் தமிழக நிதியமைச்சர் நாஞ்சிலார் பதில் அளித்து பேசுகையில் கூறியதாவது:

"நிதியமைச்சரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்செட் பற்றி குற்றச் சாட்டு சொல்லப் பட்டது. அந்த குற்றச் சாட்டைப் பற்றி விசாரித்தேன் இது பற்றி விரிவான கடிதம் ஒன்றை முதல்வருக்கு அவர் எழுதி இருக்கிறார்.

### எங்கே தங்கினார்?

1979-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் மூன்று மாதத்தில் அவர் கன்னியாகுமரி கெஸ்ட் அவுசில் தங்கி 9 ஆயிரத்து 8 ரூபாய் 20 காசு அளவுக்கு தொலைபேசி கட்டணம் செலவாகியிருக்கிறது என்பது குற்றச்சசட்டு.

முதலாவதாக அவர் கன்னியாகுமரி 'கெஸ்ட் அவுசில்' 1979ம் ஆண்டில் அக்டோபர் மாதத்தில் இருந்து ஒரு நாள்கூட தங்கவில்லை. நாகர்கோயில் விருந்தினர் மாளிகையில்தான் 32 நாட்கள் தங்கியதாக அவர் கூறி இருக்கிறார்.

தொலைபேசிக் கட்டணம் எவ்வளவுதான் அதிகமாக கற்பனை செய்து பார்த்தாலும் ஆயிரம், ஆயிரத்து 500 ரூபாய்க்கு மேல் போகாது. 9ஆயிரம் ரூபாய் அளவுக்குப் போய் இருப்பதாக எதிர்கட்சித் தலைவர் தெரிவித்திருக்கிறார். அது நிரூபிக்கப்பட்டால் பதவியை விட்டே போய்விடத்தயாராக இருக்கிறேன் என்று பேரவைச் செயலர் தெரிவித்திருக்கிறார்.

எதிர்க்கட்சித் தலைவர் (சங்கரலிங்கம்) குறுக்கிட்டு போன்சார்ஜ் கட்டியதை யாரும் மறைத்துவிட முடியாது. அதற்கான ரிக்கார்டை நிதியமைச்சர் இந்த அவையில் தாக்கல் செய்ய வேண்டும்.

நாஞ்சிலார்: குற்றச் சாட்டைச் சொன்ன எதிர்க்கட்சித் தலைவர்தான் அதற்கான ரிக்கார்டைத் தர வேண்டுமே ஒழிய என்னை ரிக்கார்டுகளைத் தேடச்சொல்வது சரியல்ல. எனக்கு வேலைகள் நிறைய இருக்கின்றன. ரிக்கார்டுகளைக் கொடுத்தால்-தவறு இருந்தால் நடவடிக்கை எடுக்கத் தயாராக இருக்கிறேன்.

சங்கரலிங்கம்: குற்றச்சாட்டிலிருந்து தப்புவதற்காக நிதியமைச்சர் இவ்வாறு சொல்கிறார்.

நாஞ்சிலார்: எனக்கு சந்தித்துப் பழக்கம் தானே தவிர தப்பிக்கும் பழக்கம் இல்லை. அவருடைய தலையீட்டின் பேரால்தான் கன்னியாகுமரி மாவட்ட ஆட்சித்தலைவர் மாற்றப் பட்டார் என்பது சரியல்ல. நிர்வாக வசதிக்காக மாவட்ட ஆட்சித் தலைவர் மாற்றப்பட்டார். 6மாதத்தில்-7 மாதத்தில் மாவட்ட ஆட்சித் தலைவர் மாற்றப் படலாமா என்று கேட்டார்கள். நிர்வாக வசதிக்காக இப்படி மாற்றப் பட்டது அவர்களது ஆட்சிக்காலத்திலும் கூட செய்யப் பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட காரணங்களுக்காக மாவட்ட ஆட்சித் தலைவரை முதலமைச்சர் மாற்றுவார் என்று எதிர்க்கட்சித் தலைவர் கருதக் கூடாது.

இவ்வாறு நாஞ்சிலார் பேசினார்.

## அண்ணா சிலைக்கு மாலை அணிவிக்காத கருணாநிதி தொண்டர்கள் கொதிப்பு

நேற்று கவர்னர் மாளிகைக்கு ஊர்வலம் நடத்தினார் அல்லவா கருணாநிதி?

இந்த ஊர்வலம் அண்ணாசாலையில் காமராஜர் சிலை அருகே இருந்து புறப்பட்டது.

ஊர்வலம் புறப்படுவதற்கு முன் காமராஜர் சிலைக்கு மாலை அணிவிக்கப்பட்டது.

ஊர்வலம் புறப்பட்டு அண்ணாசிலை அருகே வந்தபோது அங்கு கூடியிருந்த தி. மு. க தொண்டர்கள் அண்ணா சிலைக்கு மாலை அணிவிக்கும்படி கருணாநிதியிடம கேட்டார்கள்.

ஆனால் அதைக் கருணாநிதி ஏற்கவில்லை.

ஜீப்புக்குள்ளிருந்தபடியே அண்ணா சிலையை ஒரு பார்வை பார்த்தார். அவ்வளவுதான் அந்த இடத்தில் நிற்காமலேயே கருணாநிதியின் ஜீப் 'பறந்து' விட்டது.

அண்ணாவை அவமதித்த கருணாநிதியின் இந்தச் செயலைக்கண்டு அங்கிருந்த தி.மு.க ஊழியர்கள் கொதிப்படைந்தனர்.

ஊர்வலத்தில் கலந்துகொள்வதற்காக வந்திருந்த அவர்கள் கருணாநிதியின் அலட்சிய, ஆணவச் செயலைக்கண்டு பல வாறுகப்பேசியபடியே திரும்பிவிட்டனர். ஊர்வலத்தில் சேரவில்லை.

# சுதந்திரம் இல்லையா? எதிர்க்கட்சிகளுக்கு எஸ். டி. எஸ். சூடு

**சென்னை, பிப். 16-அமைச்சர்கள் சுதந்திரமாக இயங்க முடியவில்லை என்ற எதிர்க்கட்சியினர் புகாருக்கு எஸ். டி. எஸ். சூடான பதிலளித்தார்.**

குத்தகைதாரர்கள் திருத்தச் சட்டம் உள்பட நான்கு புதிய சட்டங்களுக்கான முன் வடிவைத் தாக்கல் செய்து மேலவையில் எஸ். டி. எஸ். பேசியதாவது:

இங்கே நான்கு மசோதாக்கள் வந்திருக்கின்றன. அதிலே, இரண்டு மசோதாக்கள், புயலால் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் உள்ள குத்தகை தாரர்களை வெளியேற்றுவதிலிருந்து பாதுகாக்கும் சட்ட முன் வடிவுகளாகும். முதலிலே இருக்கின்ற சட்டம் 15-1-80 வரையில்உள்ளது அதற்குப்பிறகு அவசரசட்டம் கொண்டு வரப்பட்டது. அந்த அவசர சட்டம் இங்கே சட்டமாக ஆக்கப்படுவதற்காக வந்திருக்கிற சட்ட முன்வடிவு ஒன்று. நிரந்தரமாகச் சலுகையைக் காட்ட வேண்டுமென்று ஒரு சட்டத்தைக் கொண்டு வர விருக்கிறோம்.

### சுதந்திரம் இல்லையா?

நிரந்தரமாகச் சலுகையைக் காட்ட வேண்டுமென்று சட்டத்தைக் கொண்டு வர வேண்டுமென்றால் அது மத்திய அரசுக்குச் சென்று நிறைவேற்றப்பட வேண்டும். இந்த இடைக் காலத்திலே விவசாயிகளுக்கு பாதுகாப்புக் கொடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்தச் சட்ட முன்வடிவு கொண்டு வரப்பட்டிருக்கிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்கே பேசுகிறபோது மிகவும் நன்றாக எல்லோரும் பேசினார்கள் அதிலே, நம்முடைய உறுப்பினர் கோ. சு. மணி பேசுகிற போது எனக்கு இருக்கிற சாமர்த்தியத்தைப் பற்றிப் பேசினார்.

நான் ஒன்றும் அவ்வளவு சாமார்த்திய சாலியில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ராமமூர்த்தி பேசுகின்ற போது வெகு சாமர்த்தியமாகப் பேசினார் என்னுடைய கை கால் கட்டிப் போடப்பட்டிருப்பதாகச் சொன்னார் அந்தவார்த்தையைச் சொல்லவில்லை. சுதந்திரமாக நான்இயங்க முடியவில்லை என்று சொன்னார். அதற்கு அதுதான் அர்த்தம். சிறையிலே வைத்த கைதி மாதிரி இருக்கிறேன்என்று சொன்னார். நான் இங்கு தவித்துக் கொண்டிருக்கிறேன் என்று சொன்னார் ஆனால் நான் எங்கேயும் தவிக்கவில்லை. சிறைக் கைதியாகவும் இருக்கவில்லை.

### யார் பொறுப்பு

நாங்கள் இங்கே ஒரு சட்டம் கொண்டு வருவது என்றால், நான் மட்டுமல்ல, அதைக் கொண்டு வருவது; அந்தப் பொறுப்பு என்னிடத்திலே கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அரசு கொண்டு வருகிறது என்பதுதான் பொருள் முதலமைச்சர் கொண்டு வருகிறார் எல்லா அமைச்சர்களும் கொண்டு வருகிறார்கள் அரசின் சார்பில் கொண்டு வருகிறோம் என்பதை நான் இங்கே சொல்கிறேன். அதைத்தான் நான் இங்கே பேசுகிறேன் அவ்வளவுதான். எந்த முடிவு எடுத்தாலும் அந்த முடிவுக்குப் பூரண

(1-ம் பத்தி பார்க்க)

## படித்துக்கொள்ளுங்கள் சேதியை புரிந்து கொள்ளுங்கள் மீதியை

தமிழ்நாடு மேல்சபையிலிருந்து இன்று தி.மு.க இ. காங்கிரஸ், முஸ்லிம் லீக் கட்சிகள் வெளிநடப்புச் செய்தன. சபைக்கு முதலமைச்சர் வராததற்கு எதிர்ப்புத் தெரிவித்து இந்த வெளி நடப்பு நடந்தது.

-மாலைமுரசு (15-2 80)

இன்று மேலவையில் அமைச்சர் மணிகரன் கூறியதாவது:

அரசின் சார்பில் மிக்க பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். இந்த அவை உறுப்பினர்களை அவமானப் படுத்தவேண்டும் என்றோ, புறக்கணிக்க வேண்டும் என்றோ, உரிய மரியாதை தரக்கூடாது என்றோ அரசுக்கோ, முதல்வருக்கோ எண்ணமில்லை.

சட்டமன்றத்தில் பேசிய போது குளிர் காய்ச்சலால் எம். ஜி ஆர் பட்ட வேதனையை பக்கத்திலிருந்துபார்த்தவன் நான் அதனால் தான் அன்று அவரால் பேச முடியவில்லை.

இன்றும் அவர் படுக்கையில் தான் இருக்கிறார். 'நீங்கள் என் சார்பில் அவையில் மன்னிப்புக் கோரி பதிலளிக்க வேண்டும்' என்று என்னிடம் கேட்டுக் கொண்டார்.

-அலைஓசை 15-2-80

நேற்றைக்கு முன்தினம் திடீரென கடுமையான புளூ காய்ச்சலால் தான் தாக்கப்பட்டு, அத்துடன் மாயூரத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்குவந்துதான தீரவேண்டும் என்று நண்பர்கள் வலியுறுத்தியதன் காரணமாக, நேற்று மாயூரம் நிகழ்ச்சிகளுக்குச் சென்று காய்ச்சலை அதிகப்படுத்திக் கொண்டு இன்று சட்டமன்ற நடவடிக்கைகளுக்கும் கூடச் செல்ல முடியாமல் இந்த நிகழ்ச்சிக்கு எப்படியும் வந்து சேர வேண்டும் என்கிற எண்ணத்தோடு வந்து உங்கள் முன்னால் நிற்கிறேன்.

அலமேலு அப்பாதுரை விழாவில் கருணாநிதி பேசியது. (முரசொலி 15-2-80)

## டெல்லிக்கு புதிய கவர்னர் நியமனம்

புதுடெல்லி, பிப். 16- புதுடெல்லி பகுதிக்கு புதிய லெப்டினென்ட் கவர்னராக ஜெகன் மோகனை ஜனாதிபதி சஞ்சீவரெட்டி நியமித்துள்ளார்.

இதுவரை புதுடெல்லி லெப்டினென்ட் கவர்னராக இருந்த கோஹ்லி புதிய அரசு அமைந்ததும ராஜினுமா செய்தார்.

இதனை அடுத்து ஜெகன் மோகன் புதிய கவர்னராக நியமிக்கப்பட்டுள்ளார்.

## போக்குவரத்து அமைச்சர் பொன்னையன் நிகழ்ச்சிகள்

பிப். 20ந்தேதி காலை 10.30 மணி திருவனந்தபுரம், 11.45 மணி நாகர்கோவில், பகல் 12 மணி நாகர்கோவிலில் புதிய நகரப்பேருந்துகள் துவக்க விழா, 1-30 மணி கோவைகுலம், 2.30 மணி நாங்குனேரி புதிய பேருந்து துவக்கவிழா, மாலை 6 மணி திருவனந்தபுரம், இரவு சென்னை.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டனர்.

ஆனால் துப்பாக்கி சூட்டில் ஒரு விசாரணை கைதி குண்டு பாய்ந்து மரணமடைந்தார். மேலும் துப்பாக்கி சூட்டில் ஜெயில் ஊழியர்கள் இரண்டு பேர் காயம் அடைந்தனர்.

இந்த கலவரத்தில் ஜெயில் கைதிகள், மற்றும் ஜெயில் ஊழியர்கள் உட்பட 200 பேர் காயமடைந்தனர்.

# கொடுத்தூர் சிவந்த கரத்துக்கு குவியுது நன்றி

சென்னை, பிப். 16 கழக அரசு பொருப்பேற்றதிலிருந்து அரசு ஊழியர்களுக்கு தொடர்ந்து சலுகைகளை அளித்து வருவது தெரிந்ததே.

தமிழ்நாடு நில அளவை வரைவாளர் கழகம் புரட்சித் தலைவருக்கு பாராட்டு தெரிவித்துள்ளது.

கடந்த 2 ஆண்டுகாலமாக பலசலுகைகளை அரசு அலுவலர்களுக்கு அளித்த தமிழக அரசு, அரசு அலுவலரிடம் அன்புள்ளம் கொண்டு அகவிலைப்படி உயர்வாக ரூ30 வரை மாத ஊதியம் அளித்ததற்கு தமிழக அரசுக்கும் முதல்வர் புரட்சித் தலைவருக்கும் தமிழக அமைச்சரவைக்கும் நன்றியை தெரிவித்து மாநில பொதுச் செயலாளர் ந. வேலு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணைக் குழு சங்கத்தலைவர் டி. என், சீனிவாசன் முதல்வா புரட்சித்தலைவரை சந்தித்து அரசு ஊழியர்களுக்கு அளித்துள்ள பஞ்சப்படி உயர்வுக்கு நன்றி தெரிவித்துள்ளார்.

அரசு ஊழியர்களுக்கு பஞ்சப்படி உயர்வு அளித்ததற்கும் வேலையில்லா பட்டதாரிகளுக்கு ரூ. 50 அலவன்ஸ் அளித்ததற்கும் நன்றி தெரிவித்து நண்பர்கள் முன்னேற்றக் கழகம் தலைவர் ந. சங்கரன், பொதுச்செயலாளர் கி.க. மோகன், டி.என். சீனிவாசன், பதிவறை எழுத்தர் சங்க மாநிலப் பொருளாளர் ஸ்ரீராமன். கு. நந்தகோபால், வின்சென்ட், ஆறுமுகம், ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து மாலை அணிவித்தனர்.



## திருச்சி நிகழ்ச்சி ஒத்திவைப்பு: வை. பெருமாள் அறிவிப்பு

தவிர்க்க முடியாத பணிகளின் காரணமாக பிப்ரவரி 17, 18 ஆகிய தேதிகளில் சென்னையில் இருக்க வேண்டியிருப்பதால் 17, 18 ஆகிய இரண்டு நாட்கள் திருச்சி மாவட்ட நிகழ்ச்சிகள் ஒத்திவைக்கப்படுகிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வை. பெருமாள்
தொழிற்சங்கப் பிரிவு செயலாளர்

சென்னை
16-2-80

### பர்மா தமிழருக்கு 3132 வீடுகள்

# 6 மாதங்களில் கட்டி முடிக்க பி.டி.எஸ். உத்தரவு

சென்னை, பிப். 16-சென்னை வியாசர்பாடியில் ரூ 250 லட்சம் செலவில் பர்மா தமிழர்களுக்கு 3132 வீடுகள் 6 மாதங்களில் கட்டி முடிக்கப்பட வேண்டும் என்று சமூகநலத்துறை அமைச்சர் பி. டி. எஸ். உத்தரவிட்டுள்ளார்.

இந்த வீடுகள் கட்டப்படும் திட்டத்தை விரைவுபடுத்த நேற்றுஅதிகாரிகளுடன் அமைச்சர் நீண்ட நேரம் ஆலோசனை நடத்தினர். அதன்பிறகு இந்த உத்தரவை அமைச்சர் பிறப்பித்தார்.

பர்மாவில் இருந்துவந்து இருக்கும் தமிழர்களுக்கு வியாசர்பாடியில் 3132 வீடுகள் ரூ 250 லட்சம் செலவில் கட்டப்பட இருக்கிறது.

பல ஆண்டு காலமாக இத்திட்டம் கிடப்பில் இருந்து புரட்சித்தலைவர் ஆட்சியில் செயல் வடிவம் பெற்றுள்ளது தெரிந்ததே.

இந்த 3132 வீடுகளையும் குடிசைமாற்று வாரியமும், அரிசன வீட்டுவசதி வாரியமும் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

இந்த வீடுகளைக் கட்டுவதை விரைவுபடுத்த நேற்று குடிசை மாற்று வாரிய அதிகாரிகளுடனும் அரிசன வீட்டுவசதிவாரிய அதிகாரிகளுடனும் அமைச்சர் பி. டி. எஸ்ஆலோசனை நடத்தினர்.

பிற்பட்டோர் நல இலாகா செயலாளர் அலுவாலியா, வருவாய்துறை செயலாளர் டி. வி. வெங்கட்ராமன், சென்னைமாவட்ட ஆட்சித்தலைவர் வெங்கடாசலம், மறுவாழ்வுத்துறை இயக்குநர், குடிசைமாற்று வாரிய கண்காணிப்பு பொறியாளர், அரிசன வீட்டுவசதிவாரிய நிர்வாக அதிகாரி ஆகியோர் உட்பட பல அதிகாரிகள் இந்த ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

பர்மாவில் இருந்து தாயகம் வந்துள்ள இந்த தமிழர்களின் துயர் துடைக்கப்பட இவர்களுக்கு வீடுகளை 6 மாதங்களில் கட்டி முடிக்கப்பட வேண்டும் என்று அமைச்சர் பி.டி. எஸ். அப்போது உத்தரவிட்டார்.

## அசுத்த சூழ்நிலையில் தாஜ்மகால்

புதுடெல்லி, பிப். 16- கல்வி, சமூக நல, சுகாதார அமைச்சர் பி. சங்கரானந்த். அசுத்த காற்று சூழ்நிலையிலிருந்து தாஜ்மஹால் பாதுகாக்கப்படுவதற்கு தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று கூறினர்.

இந்தியாவிற்கு வந்துள்ள இங்கிலாந்தின் கலைக் கவுன்சிலின் தலைவர் சர் கென்னத் ராபின்சனுடன் கலந்துரையாடும் போது சங்கரானந்த் இவ்வாறு கூறினர்.

மதுரா சுத்திகரிப்பு நிலையத்திலிருந்துவரும் அசுத்த காற்றின்சூழ்நிலையிலிருந்து தாஜ்மஹாலைப் பாதுகாக்க சிறந்த தொழில் நுட்ப முறைகள் பயன்படுத்தப்படும் என்றும் அங்குள்ள அனல் மின் நிலையங்கள். லோகோஷெட், மேலும் 150 பட்டறைகள் உண்டாக்கும் அசுத்த காற்று தாஜ்மஹாலின் சலவைக்கல் அமைப்பிற்கு ஆபத்தை விளைவிக்கும் என்பது நிபுணர்கள் கருத்தாகும் என்றும் அவர் கூறினர்.

## அண்ணாநகர் தொகுதி மகளிர் ஆலோசனைக் கூட்டம்

சென்னை, பிப். 16 அண்ணா நகர் தொகுதி மகளிர் ஆலோசனைக் கூட்டம்வரும்17ந்தேதிஞாயிறு பிற்பகல் 3 மணிக்கு 72 வது வட்டம் டி. பி. சத்திரம் அண்ணா சமூகக் கூடத்தில்நடைபெறுகிறது.

கூட்டத்தில் தென் சென்னை மாவட்ட மகளிர் அணி அமைப்பாளர் பெ. சந்திரா கலந்து கொள்கிறார். அனைவரும் தவருது கலந்துகொள்ளுமாறு மகளிர்தொகுதி அமைப்பாளர் ராஜலட்சுமி கோலப்பா கேட்டுக்கொண்டுள்ளார்.

### விலகிவிட்டதாக செய்தி வெளியீட்டு

# பொய்யிலே கட்சி வளர்க்கும் கருணாநிதி: கழகப் பிரமுகர் சாடு

சென்னை, பிப்- 16- அவர் விலகல் இவர் விலகல் என்று பொய்ச்செய்திகளை வெளியிட்டே தன் கட்சியை வளர்க்க நினைக்கிறார் கருணாநிதி அந்த வகையில் தான் நான் கழகத்திலிருந்து விலகிவிட்டதாக புளுகுச் செய்தியை வெளியிட்டுள்ளார் என்று அச்சிறுபாக்கம் நகரப்பொருளாளர் எம். சனார்த்தனம தெரிவித்துள்ளார்.

தமிழகத்தின் காவலனாக அண்ணா வழியில் கறைபடாத கரங்களோடு நல்லாட்சி நடத்திவரும்புரட்சித் தலைவரை இதய தெய்வமாக ஏற்று கழகத்தில் தீவிரப் பணி புரிந்து வரும் தன்னை தி.மு.கவில் சேர்ந்ததாகச் பொய்ச் செய்தி வெளியிட்டிருப்பதற்கு அச்சிறுப்பாக்கம் நகரப் பொருளாளர் எம். சனார்த்தனம் கடும் கண்டனம் தெரிவித்துள்ளார்.

நான் என்றும் போல் புரட்சித்தலைவரின் தலைமையில் கழகப்பணி புரிந்து வருகின்றேன். எந்த சக்தியினாலும் என்னைக்கழகத்திலிருந்து பிரிக்க முடியாது.

இவ்வாறு அச்சிறுபாக்கம் நகரப் பொருளாளர் எம். சனார்த்தனம கூறியுள்ளார்.

## கேசவன் மறுப்பு

கடமலைப்புத்தூர் கழக அமைப்பாளர் பி.கேசவன் கட்சியிலிருந்து தான்விலகிவிட்டதாக பத்திரிகைகளில் வந்தது பொய்ச்செய்தி என்று மறுப்பு வெளியிட்டுள்ளார்.

நான் அமைப்பாளர் பொறுப்பிலிருந்தோ, உறுப்பினர் பொறுப்பிலிருந்தோ விலகவில்லை. எப்போதும் போல் புரட்சித்தலைவரின் தலைமையில் இயங்கும் கழகத்தில் இருந்து தொண்டாற்றி வருகிறேன். இது போன்ற பொய்ச் செய்திகளால் கழகத்தையும், அதில் தங்களை இணைத்துக் கொண்டுள்ள லட்சோப லட்சம் தொண்டர்களையும் எதுவும் செய்ய இயலாது என்றும பி கேசவன் குறிப்பிட்டுள்ளார்.

### 19-ந் தேதியன்று

## திருப்பூரில் வை. பெருமாள் பேசுகிறார்

சென்னை, பிப். 16- திருப்பூர் நகரில் நடைபெறும் கழகப் பொதுக் கூட்டத்தில் தொழிற்சங்கப் பிரிவு செயலாளர் வை. பெருமாள் கலந்து கொண்டு பேசுகிறார்.

திருப்பூர் தாராபுரம் பாதையில் 19ந் தேதியன்று மாலை 7 மணிக்கு க. சாமிநாதன் தலைமையில் பிரும்மாண்டமான பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

வை. பெருமாள், இரா. மணிமாறன் எம்.எல்.ஏ., சிங்கை கருப்புசாமி பா. அய்யப்பன், முகவை கண்ணன், இரா. சுப்பிரமணியம், அன்புசெழியன், சந்திரசேகர் ஆகியோா பேசுகின்றனர்.

# பிரதமர் தலைமையில் மத்திய மந்திரிசபைக் கூட்டம் நடந்தது

புதுடெல்லி, பிப். 16- மத்திய அமைச்சரவைக் கூட்டம் நேற்று (வெள்ளிக்கிழமை) புதுடெல்லியில் கூடி பல முக்கிய பிரச்சினைகள் பற்றி விவாதித்தது. மாநில சட்டசபைகளைக் கலைப்பது பற்றிய விஷயம் இக்கூட்டத்தில் இடம் பெறவில்லை என்று அதிகார பூர்வமாக தெரிவிக்கப்பட்டது.

புதுடெல்லியில் மத்திய அமைச்சரவைக் கூட்டம் நேற்று பிரதமர் இந்திரா காந்தி தலைமையில் நடைபெற்றது.

இந்தக்கூட்டத்தில் விவசாய விளை பொருட்களுக்கான விலை நிர்ணயிக் கமிஷனின்விசாரணை வரையறையைவிரிவுபடுத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது.

விவசாயிகளுக்கு ஆகிற உற்பத்திச் செலவு ஆராயப்பட வேண்டும் என்றும் பணவீக்கநிலைமையினாலோ அல்லது 'மார்க்கெட்டிங்' முறையினாலோ விவசாயிகள் பாதிக்கப்படாமல் இருக்க வழிவகைகளைக் காணவேண்டும் என்று விவசாய விளைபொருள் விலைகமிஷனிடம் தெரிவிப்பது என்று அமைச்சரவை முடிவு செய்தது.

விலைவாசிகள் உயர்வைத் தடுத்து நிறுத்துவதற்கான நடவடிக்கைகளை வகுப்பதற்காக, அரசு செயலாளர்களைக் கொண்ட உயர் மட்டக் கண்காணிப்புக் குழு ஒன்றை அமைப்பது என்று அமைச்சரவை முடிவு செய்தது.

## விலைவாசி குறைய

விரைவில் விலைவாசி குறைய பயனுள்ள நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்பதில் பிரதமர் இந்திராகாந்திமுனைப்பு காட்டுகிறார்.

பிரதமரின் கருத்துப்படியே உயர்மட்டக் கண்காணிப்புக் குழு அமைக்கும் விஷயம் முடிவு செய்யப்பட்டது.

அமைச்சரவை கூட்டத்தில் சில மாநில சட்டசபைகளைக் கலைப்பதுபற்றியவிஷயம் எதுவும் இடம் பெறவில்லை. அமைச்சரவைக் கூட்டத்திற்குப்பின் இது அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது.

அமைச்சரவைக் கூட்டம் கூடுவதற்கு முன்னதாக பூர்வாங்கக் கூட்டம் ஒன்று நடந்தது. அந்தக் கூட்டத்திலும் சில மாநில சட்டசபைகளைக் கலைக்கும் விஷயம் ஆலோசிக்கப்படவில்லை என்று அதிகார பூர்வமாக தெரிவிக்கப்பட்டது.

# அரிசன-மலைவாழ்பள்ளி மாணவ மாணவிகட்கு இலவச சீருடை

சென்னை, பிப் 16 தாழ்த்தப்பட்ட மற்றும் மலைவாழ் மக்கள் நலத்துறையின் சார்பாக நடத்தப்படும் பள்ளிகளில் மாணவ, மாணவிகளுக்கு இலவசமாக சீருடைகள் (யூனிபாரம்) வழங்கநிதிஒதுக்கீடு செய்துள்ளதாக தமிழக அரசு அறிவித்துள்ளது.

அரிசன நலத்துறையினரால நடத்தப்பட்டு வரும் பள்ளிகளில் குழந்தைகளுக்கு இலவசமாக சீருடைகள் வழங்கப்பட்டு வந்தன. அப்பள்ளிகளில் முதல் வகுப்பு முதல் 8-வது வகுப்பு வரை படிக்கும் குழந்தைகளுக்கு கடந்த இரண்டு வருடங்களாக இலவசமாக சீருடைகள் அரசு சார்பாக வழங்கபபட்டு வந்தன.

இந்த முறையில் வழங்கப்படும் சீருடைகள் அப்பள்ளிகளில் படித்து வரும்எல்லாபிரிவுகுழந்தைகளுக்கும், ஜாதி மத வேறுபாடின்றி வழங்கப்பட வேண்டும் என்று அரசு அறிவித்துள்ளது.

மேலும் இடபோதுஇந்த ஆண்டு முதல் அரிசன, மற்றும் மலைவாழ் மக்கள் சார்பாக நடத்தப்பட்டு வரும் பள்ளிகளில் படிக்கும் மாணவ மாணவிகள் அனைவருக்கும் இலவசமாக சீருடைகள் வழங்கப்படும் என்றும் அதற்காக நிதி ஒதுக்கீடும் செய்யப்படடுள்ளது என்றும தமிழக அரசு அறிவித்துள்ளது.

# இன்னா நாற்பது-அது என்ன நாற்பது?

புரட்சித்தலைவர் அமைச்சரவைமீது நாற்பது 'ஊழல்' புகார்களை ஜனாதிபதியிடம் கருணாநிதியார் கொடுத்தாராம்.

அந்தப் புகார்கள்பற்றி அவரிடம் நிருபர்கள் விவரம் கேட்டபோது, அதுபற்றி சொல்வதற்கில்லை. 'இன்னா நாற்பது' என்றாராம் கருணாநிதி.

குற்றச்சாட்டுகளின் விவரத்தைக் கூற அவரைக் கோழைத்தனம் தடுத்திருக்கிறது.

என்னென்ன புகார் என்ற விவரத்தை அவர் கூறினால்-விவரம் தெரிந்த நிருபர் எவராவது அந்தப் புகார்களின் விலா எலும்பை விமான நிலைய வாசலிலேயே முறித்துவிடுவாரோ என்ற அச்சம்.

கருணாநிதியின் கண்டுபிடிப்புகளான அந்தப் புகார்களின் கதி அந்த அளவுக்குத்தான் அமையும்.

இது கருணாநிதிக்கும் தெரியும்.

ஆனாலும், ஏழாண்டுக்கால கிரீடவாழ்வில் அவர் மேனியில் தோன்றிய ஊழல் படைகளுக்கு ஒத்தடம் கொடுக்கவும்,பழைய குற்றவாளி என்ற நிலையிலிருந்து ஒதுங்கிக் கொள்ள முடியுமா என்ற முயற்சியின் ஒரு அங்கமாகவுமே.

புரட்சித்தலைவர் மீது ஊழல் புகார் என்று ஊர்வலம் வருகிறார்.

கோழியிலிருந்து முட்டை வந்ததா. முட்டையிலிருந்து கோழி வந்ததா என்ற தீராத சந்தேகம் போல.

ஊழலே ஊர்வலமாக வந்ததா, ஊர்வலம் ஊழலாக வந்ததா என்று தெரியாத அளவுக்கு நேற்றைய கருணாநிதியின் ஊர்வலம் இருந்தது.

இந்த எண்ணம் மக்களிடம் ஏற்பட்டுவிடக் கூடாதே என்றுதான் 'இன்னா நாற்பது' என்று இலக்கியம் பேசியிருக்கிறார்.

அவரைவிட அதிக இலக்கியம் தெரிந்தவர்கள் அண்ணா திராவிட முன்னேற்ற கழகத்தின் தலைமையை அலங்கரிப்பவர்கள் என்பதை நாடறியும்.

இன்னா நாற்பது கருணாநிதிக்குச் சொந்தம்!

இனியவை நாற்பது நம்மவர்க்குச் சொந்தம்.

கட்டிடம் நாற்பது தான் கருணாநிதி அறிந்தது.

'கார் நாற்பது' கற்றவர் நாம்.

'களவு' வழி நாற்பது கருணாநிதி கற்றது!

களவழி நாற்பது நம்மவர் ஏற்றது!

ஏழை எளியவர்களின் அகம்குளிர நானூறு திட்டங்களைச் செயல்படுத்தி-

இதர மாநிலத்தாரும் போற்றிப் பாராட்டும் வண்ணம் புறம் புகழும் நானூறு திட்டங்களை அறிமுகப்படுத்தும் புரட்சித்தலைவர் ஆட்சியின் மாட்சியை 'இன்னா நாற்பது' என் முனையளவும்குறைக்க முடியாது.

# சென்னை சுத்தம்: மேற்கு வங்க அமைச்சர் பாராட்டு

சென்னை, பிப். 16- சென்னை நகரில் நகர்புற அபிவிருத்தி, வீட்டுவசதி, குடிநீர் வசதி திட்டங்கள் செயல்படுவதை பார்வையிட வந்த மேற்கு வங்க வீட்டுவசதி மந்திரி பெசந்தகுர் சென்னை நகரம் மிகவும் சுத்தமாக இருக்கிறது என்று பாராட்டினார்,

அவர் சென்னையில் பல்வேறு பகுதிகளுக்கு சென்று அங்கு எவ்வாறு இத்திட்டங்கள் செயல்படுத்தப் படுகின்றனஎன்று கேட்டறிந்தார்.

பிறகு அவர் தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தத்தை சந்தித்து பேசினர் மற்றும் பெருநகர வளர்ச்சிக் குழுத்தலைவர் யு.எஸ். நடராஜன், மாநகராட்சி தனி அதிகாரி ராமதாஸ், குடிசை மாற்று வாரியத் தலைவர்ராமபத்திரன் ஆகியோரைச் சந்தித்துப் பேசினர்.

## பேட்டி

இது குறித்து அவர் நிருபர்களிடம் கூறியபோது:

சென்னை நகரம் மிகவும் சுத்தமாக வைக்கப்பட்டுள்ளது. இதற்கு முன் நான் 2 முறை சென்னை வந்துள்ளேன். ஆனால்இப்போது பல அபிவிருத்திகள் ஏற்பட்டுள்ளது. இரவு நேரங்களில் கூட சென்னையில் குப்பைகள் அகற்றபபடுவது ஒரு நல்ல திட்டம் இந்த திட்டத்தை நான் எங்கள் ஊரிலும் (கல்கத்தாவில்) செயல் படுத்தப் போகிறேன்.

மேலும் சென்னையில்பல இடங்களில்அமைக்கப் பட்டுள்ள கண்ணைப் பறிக்கும் 'சோடியம்' விளக்குகள் மிக சிறப்பாக இருக்கிறது மனைகள் பிரிக்கப்பட்டு, குடிசைவாசிகளுக்கு வசதி செய்து கொடுத்திருப்பது பாராட்டுக்குரியது.

இங்கு கிராமங்களுக்கு இநத அரசு குடிநீர் வசதி செய்து கொடுத்திருப்பது போல எங்கள் ஊரிலும் செய்யப் போகிறேன்

மொத்தத்தில் சென்னை நகர மக்கள் தங்கள் இடத்தை சுத்தமாக வைத்துச் கொள்வதில் அதிக ஆர்வம் காட்டுகிறார்கள் என்பது சென்னை நகரை பார்த்தாலே தெரிகிறது.

சென்னை நகரை போல எங்கள் ஊரையும் விரைவில் மாற்றி அமைப்பேன்.

இவ்வாறு மேற்கு வங்க மந்திரி கூறினர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. 1st Main Road, United India Colony, Madras 24. Editor M. G. Chakkrapani

### உத்தர பிரதேசத்தில்

# சிறைக்குள்ளேயே துப்பாக்கிச் சூடு: ஒரு கைதி மரணம்

## தடியடியில் 200 பேர் காயம்

லட்சுமணபுரி, பிப்- 16- லட்சுமணபுரி மாவட்ட சிறை சாலையில் ஒரு விசாரணை கைதி காலை உணவு கேட்டதில் ஏற்பட்ட வாய் தகராறில் கலவரம் ஏற்பட்டு ஜெயிலின் உள்ளேயே துப்பாக்கி சூடு நடந்தது. அதில் ஒரு விசாரணை கைதி மரணம் அடைந்தார். மற்றும் ஜெயிலர் உட்பட 200 போ காயம் அடைந்தனர்.

உத்தரபிரதேச, லட்சுமணபுரி மாவட்டத்தில் உள்ள ஒரு சிறைச்சாலையில் இந்த துப்பாக்கிசூடு சம்பவம் நடைபெற்றது.

சிறைச்சாலையில் இருந்த ஒரு விசாரணைக்கைதிகாலையில் அவருடைய நண்பர் ஒருவருக்கும் சேர்த்து உணவு கேட்டபோது தகராறு ஏற்பட்டது.

உணவு கொடுக்கஜெயில் ஊழியர்கள் மறுப்பு தெரிவித்தனர். இதனால் ஜெயில் கைதிகள் அனைவரும் உண்ணா விரதம் இருக்கப் போவதாக அறிவித்தனர்.

இந்த தகவல் ஜெயிலருக்கு தெரிவிக்கப்பட்டது. அவர் உடனே இடத்திற்கு வந்து எந்த வித அசம்பாவிதமும் நடக்காமல் இருக்க சிறை கைதிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தினர். அப்போது வாய் தகராறு ஏற்பட்டு சிறை கைதிகள் ஜெயிலரையும், மற்ற ஜெயில் ஊழியர்களையும் பிடித்துவைத்து தாக்க ஆரம்பித்தனர்.

இதையறிந்த போலீசார் அந்த இடத்திற்கு வந்துதடியடி நடத்தினர். இதனால் சிறை கைதிகள் போலீசார் மீது கல்வீச்சில் ஈடுபட்டனர்.

கலவரம் கட்டுக்கடங்காமல் போனதால் போலீசார் துப்பாக்கி சூடு நடத்தினர்.

அப்போது சிறை கைதிகள் தாங்கள் பிடித்து வைத்திருந்த ஜெயில் ஊழியர்களை முன்னே நிறுத்தி வைத்து விட்டு அவர்கள் பின்னால்பதுங்கிக்

(1-ம் பக்கம் பார்க்க)

## ஏஜெண்டுகள் கவனிக்க

14-2-80 முதல் அனைத்து விற்பனையாளர்களுக்கும் அண்ணா நாளிதழ் தொடர்ந்து அனுப்பப்பட்டு வருகிறது. முன்பாக்கி நிலுவை வைத்துள்ள விற்பனையாளர்க்கு வரும் 20-2-80 முதல் பிரதிகள் அனுப்புவது நிறுத்தப்படுகிறது என்பதனை ஏற்கனவே சுற்றறிக்கைமூலம் தெரிவித்துள்ளோம்.

எனவே, உடன் பாக்கி தொகையினை அனுப்பி தொடர்ந்து பிரதிகள் பெற ஆவன செய்யவும். தவறினால் பிரதிகள் அனுப்புவது நிறுத்தப்படுவதுடன் ஏஜென்சி உரிமையும் ரத்து செய்யப்படும்.

தொகை அனுப்பும் ஏஜெண்டுகள் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா வங்கிமூலம் டிராப்ட் அனுப்ப வேண்டாம்.

விநியோக நிர்வாகி
'அண்ணா'

## தமிழ்நாட்டுக்கு மத்திய அரசின் பொதுத்துறை முதலீடு மிகமிக குறைந்த நிலையிலும்

## தென்னகத்திலேயே தொழில் வளர்ச்சியில்

# தமிழகத்துக்கே முதலிடம்

## மேலவை விவாதத்தில் நாஞ்சிலார் அளித்த புள்ளிவிவரத் தகவல்

சென்னை, பிப். 16- தமிழகத்தில் மத்திய அரசின் பொதுத்துறை முதலீடு மற்ற மாநிலங்களைக் காட்டிலும் குறைந்த அளவுதான் என்றாலும், தென்னகத்திலேயே தொழில் வளர்ச்சியில் முதலிடம் வகிப்பது தமிழகம்தான் என்று சட்டமன்ற மேலவையில் புள்ளிவிவரத்துடன் கூறினார் நிதியமைச்சர் நாஞ்சிலார்.

கவர்னர் உரைக்குநன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின்மீதான விவாதங்களுக்குப் பதிலளித்து நாஞ்சிலார் பேசினார், அப்போது அவர் கூறியதாவது:-

ராமமூர்த்தி பேசுகையில் தொழில் துறையில் 3வது இடத்தில் இருந்த தமிழகம்13வது இடத்திற்குப் போய்விட்டது என்று சொன்னார்.

ஒரு மாநிலத்தின் தொழில் வளர்ச்சி என்பது தொழிலாளர்களின் எண்ணிக்கை, தொழிற்சாலைகளின் எண்ணிக்கை தொழிற்சாலைகளுக்கு அளிக்கப்படும் மின்சாரத்தின்அளவு, முதலீடு முதலியவற்றை அடிப்படையாக கொண்டது.

''காமர்ஸ்'' என்ற பத்திரிகையில் செப்டம்பர் மாதப்பதிப்பிலேதமிழ்நாட்டில் ஏற்பட்டுள்ளதொழில் வளர்ச்சியைப்பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. அதை இங்கே தெரிவிக்கிறேன்.

தமிழ்நாடு 1978 79ல் தொழில் வளர்ச்சியில் முதல் இடத்தைப் பெற்றிருப்பதாக தெரிவிக்கப் பட்டிருக்கிறது.

பிறகுஅந்த ''காமர்ஸ்'' தென்னகத்தின் நான்கு மாநிலங்களின் கணக்கையும் எடுத்துக் காட்டியிருக்கிறது.

### பட்டியல் காட்டும் உண்மை

தமிழகத்தில் 1978ம் ஆண்டில் 189 தொழிற்சாலைகள் பதிவாகி இருக்கின்றன. 1979ம் ஆண்டில் ஏப்ரல் மாதம் வரை 129 தொழிற்சாலைகள் பதிவாகி இருக்கின்றன.

கர்நாடக மாநிலத்தில் 1978ம் ஆண்டில் 132 தொழிற்சாலைகள் பதிவாகி இருக்கின்றன 1979 ஏப்ரல் வரை பதிவாகி இருப்பவை 78.

ஆந்திர மாநிலத்தில் 1978ம் ஆண்டில் பதிவாகி இருப்பவை 103. 1979 ஏப்ரல் முடிய பதிவானவை 68

கேரள மாநிலத்தில் 1978ம் ஆண்டு பதிவாகி இருக்கும் தொழிற்சாலைகள்73. 1979ம் ஆண்டில் பதிவானவை 25.

நான்கு மாநிலங்களிலும் 1978, 1979 ஆண்டுகளில் பதிவான தொழிற்சாலைகள் தமிழ்நாட்டில்தான் அதிகம் என்று''காமர்ஸ்'' பத்திரிகையில் கூறப்பட்டிருக்கிறது.

மத்திய அரசு பொதுத்துறையில் கணிசமாக முதலீடு செய்திருக்கிறது. இது மாநிலத்திற்கு மாநிலம் மாறுகிறது.

1-4-78வரை மத்திய அரசு முதலீடு செய்யப்பட்ட விவரங்களை இங்கே குறிப்பிடுகிறேன்.

### தமிழகத்துக்கு மட்டும் குறைவு

பீகார் மாநிலத்தில் முதலீடு செய்யப்பட்ட தொகை ரூ. 2530 கோடி. மத்தியப் பிரதேசத்தில் முதலீடு செய்யப்பட்ட தொகை 1493 கோடி ரூபாய் மேற்கு வங்காளத்தில் முதலீடுசெய்யப்பட்ட தொகை. 768 கோடி ரூபாய் ஒரிசாவில் முதலீடு செய்யப்பட்ட தொகை 647 கோடி ரூபாய் மராட்டிய மாநிலத்தில் முதலீடு செய்யப்பட்ட தொகை 631 கோடி ரூபாய். தமிழ்நாட்டில் முதலீடு செய்யப்பட்ட தொகை 467 கோடி ரூபாய்.

தமிழ் நாட்டில் மக்கள் தொகை தொழில் நுட்ப அறிவு மற்ற அடிப்படையில் ஒதுக்கி முதலீடு செய்வதாக இருந்தால் கூட மொத்த முதலீட்டில் 10 சதவிகிதம் ஒதுக்கி இருக்க வேண்டும்.

மத்திய அரசின்மொத்த முதலீட்டுத் தொகை 9, 238.7 கோடியாகும். இதில் 10 சதவிகித அடிப்படையில் ஒதுக்கி இருந்தால்கூட 923 கோடிரூபாய் அளவுக்குத் தொகைதமிழ் நாட்டில் முதலீடு செய்திருக்க வேண்டும்.

பின் ஏன் இப்படிச் செய்தார்கள்? ஏன் அந்தந்த மாநிலங்களில் போட்ட தொகை அதிகமாக இருக்கிறது.

அந்தக் காரணத்தினாலே தான் தமிழக தொழில் வளர்ச்சியில் தொய்வு, வளர்ச்சிக்குன்றல் ஏற்பட்டது.

டி.ஐ.ஐ.சி. வட்டிக்கு வட்டி வசூலிக்கும்நிறுவனமாக விளங்குகிறது என்று பேசினார்கள். இதே நிலையைத்தான் பின்பற்றுகிறது இந்தியத் தொழில் நிறுவனம். இந்தியத் தொழில் முதலீட்டு நிறுவனம் இந்திய தொழில் வளர்ச்சி நிறுவனம் ஆகியவை இந்த முறையைத் தான் பின்பற்றுகின்றன.

வட்டியை ஒழுங்காக செலுத்தாதவர்களிடமிருந்து வட்டி வசூலிக்கப் படுகிறது.

டி. ஐ. ஐ.சியில் 1978 79-ஆம் ஆண்டில் முதலீடு செய்யப்பட்ட தொகை 12 கோடியே 6 லட்சம். 1979 80ம் ஆண்டில் 10 மாத காலத்திற்குள் அதாவது 31-1-80 வரை ஒதுக்கப்பட்ட தொகை 12 கோடியே 97 லட்சம். இதிலிருந்து தொழில் வளர்ச்சி பெருகி இருப்பது தெரியும்.

### 30 ஆயிரம் பேருக்கு வேலை

இந்த டி.ஐ ஐ.சி. நிறுவனத்தின் மூலம் சென்ற ஆண்டு 13 ஆயிரத்து 500 பேருக்கு வேலைவாய்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு இந்த நிறுவனத்தின் மூலம் தொழில் வாய்ப்பு பெற்றவர்கள் 16 ஆயிரத்து 200 பேர்களாவர்.

அலைஓசையைப் பற்றி இங்கே பேசினார்கள், கொடுத்த கடனை சரியாக திருப்பிச்செலுத்தாத அலைஓசை மீது நடவடிக்கை எடுக்கப் பட்டிருக்கிறது.

அலைஓசை 5 லட்சம் ரூபாய் பாக்கி தரவேண்டியதற்காக கடன் வசூல் வருவாய்துறை மூலம் வசூல் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

அலைஓசை டி.ஐ.ஐ.சிக்கு செலுத்தவேண்டிய வட்டி பாக்கி 4 லட்சத்து 49 ஆயிரத்து 568 ரூபாய் 37 காசு. அலைஓசை செலுத்தவேண்டிய தவணை பாக்கி 4 லட்சம் ரூபாய். இந்த நிறுவனத்தின் மீது மொத்த கடனுக்காக வழக்கு தொடரப்பட்டு விசாரணையில் இருக்கிறது. எனவே இதைப்பற்றி இதற்குமேல் பேசுவதுசரியாகஇருக்காது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

உறுப்பினர் அடிப்படை உண்மைகளைப் பேசினால் அரசுக்கும் நல்லதாக இருக்கும்.

சிவகங்கையில் அலுமினியத் தொழிற்சாலை பொதுத்துறையின் மூலம் தொடங்கப்பட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த தொழிற்சாலையில் தம்மால் பங்கு மூலதனம் செலுத்த இயலாது என்று கூட்டாக சேருவதற்காக ஒப்புக்கொண்டிருந்த நபர் தெரிவித்துவிட்டார். இருந்தாலும் இந்த நிறுவனத்தை தொடங்குவது லாபகரமானது என்று கருதப்படுவதால் இத்திட்டம் விரைந்து செயல் படுத்தப்படும்.

இந்த நிறுவனத்திற்காக 'டிட்கோ' இதுவரை 21 லட்சம் ரூபாய் செலவிட்டிருக்கிறது.

பாலசுப்பிரமணியம் இங்கே பேசுகையில் தீப்பெட்டி தொழிற்சாலைகள் என்னவாயிற்று கரும்புச் சக்கையில்இருந்து காகிதம் தயாரிக்கும் ஆலை என்ன வாயிற்றுஎன்றுகேட்டார்.

தமிழ்நாட்டில்2 ஆயிரம் தொழில்கூட்டுறவுமையங்கள் தொடங்கப்படும். இவை ஒவ்வொன்றிலும் 100 தொழிற் கூடங்கள் இயங்கும்.

### காகித ஆலை உண்டு

கரும்புச் சக்கையில் இருந்து காகிதம் தயாரிக்கும் தொழிற்சாலைக்கு மத்திய அரசிடம்இருந்துஉரிமம் கிடைத்து இருக்கிறது. இந்திய காகிதத்துறையிடம் இருந்து விவரங்கள் கிடைக்கப் பெற்ற பின் எந்திரங்களை வாங்கும் முயற்சியினை இந்த அரசு மேற்கொள்ளும்.

சந்தோஷம் பேசும் போது மதுரையில் உயர் நீதி மன்றத்தின் கிளை அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

ஏற்கனவே அரசு இது பற்றி முடிவு செய்து, மத்திய அரசிற்கு எழுதியது. அவர்கள் அதை கிடப்பிலே போட்டிருக்கிறார்கள், அதை கிளப்புவதற்கு நடவடிக்கை எடுக்கப்படும்.

எலமந்தா பேசும் போது வாக்காளர் பட்டியலில் இருந்து 6 லட்சம் வாக்காளர்கள் விடுபட்டுப் போய் இருப்பதாகவும் தி. மு. கழகத்தினரை வேண்டுமென்றே நீக்கி விட்டதாகவும் கூறினார்.

வாக்காளர் பட்டியலில் 5 லட்சத்து 65 ஆயிரத்து 57 பேர் குறைந்திருப்பது உண்மை. இந்த வாக்காளர்பட்டியல் 12 ஆண்டுகளுக்கு முன்பு தயாரிக்கப் பட்டதாகும்புதிதாக வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்படவில்லை. இறந்தவர்களின் பெயர்கள் நீக்கப் பட்டிருக்கின்றன. அதே போன்று இடம் மாறியவர்களின் பெயர்களும் நீக்கப்பட்டிருக்கின்றன,

வாக்காளர் பட்டியலில் சேர்க்க வேண்டியவர்களும் நீக்க வேண்டியவர்களும் எழுதித்தரலாம். என்று அறிவிக்கப்படுகிறது நீக்கப் படவேண்டியவர்கள் வந்து எழுதிக்கொடுப்பதே இல்லை.

இவ்வளவு பெரிய நகரத்தில் இடம் விட்டு இடம் மாறுவதுஎன்பது இயல்பாக நடக்கக் கூடிய ஒன்றுதான்

### உள்நோக்கம் கற்பிப்பதா?

எனவே வாக்காளர் பட்டியலில் வேண்டுமென்றே திட்டமிட்டே நீக்கப்பட்டது என்று உள்நோக்கம் கற்பிக்கும் எண்ணம் வேண்டாம்.

மியாகான் வட்ட ரயில் பாதைத் திட்டம் மத்திய அரசால் கைவிடப்பட்டு விட்டதுஎன்று தெரிவித்தார். இந்த திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் மத்திய ரெயில்வே அமைச்சராக இருந்த மதுதந்தவதேக்கு கடிதம் எழுதினார்.

அதன் பிறகு நான் டெல்லி சென்றிருந்த போது இந்த திட்டத்தின் அவசியம் பற்றி மத்திய ரெயில்வே அமைச்சரிடம் எடுத்துக் கூறி வற்புறுத்தினேன் இந்த திட்டத்திற்கு ரூ.140 கோடி செலவாகும் என்பதால் விட்டுவிட வேண்டாம். பெருகி வரும் மக்கள் தொகைக்கு ஏற்ப இது அவசியம் என்று தெரிவித்தோம்.

டெல்லியில் ஏற்கனவே இருந்த அரசு இந்த திட்டத்தைக் கைவிட்டிருந்தாலும் இப்போது புதிதாக வந்திருக்கிற அரசையும் இந்த அரசு வற்புறுத்தும்.

இங்கிருந்து வெளியேறிய கட்சி உறுப்பினர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிவித்துக்கொள்கிறேன். நீங்கள் குறிப்பிட்டது போல இந்த அவைக்கு வரக் கூடாது என்ற எண்ணம் முதலமைச்சருக்கு இல்லை. நீங்கள் அந்த உணர்வோடு செல்லவேண்டாம்.

### கவலை வேண்டாம்

பெரியார் மாவட்டம், புதுக்கோட்டை தஞ்சை முதலிய மாவட்டங்களில் போராட்டத்தின் போது கைது செய்யப்பட்ட கல்லூரி ஆசிரியர்கள் விடுதலை செய்யப்படவேண்டும் என்று ஏற்கனவே உத்தரவு அனுப்பப்பட்டு விட்டது. இந்நேரம் அவர்கள் விடுதலை செய்யப்பட்டிருப்பார்கள்.

உறுப்பினர்கள் ஜி.சுவாமிநாதன் ஜனார்த்தனம் லட்சுமிகாந்தன், முத்துசாமி ஆகியோர் கவலை கொள்ளத் தேவையில்லை.

இவ்வாறு நாஞ்சிலார் பேசினார்.

---

பெரம்பூர் தொகுதி

### மகளிர் ஆலோசனை கூட்டம்

சென்னை, பிப். 16- வரும் 17ந் தேதி ஞாயிறு பகல் 3 மணி அளவில் பெரம்பூர் தொகுதி மகளிர் ஆலோசனைக் கூட்டம் 24-வது வட்டம் கக்கன்ஜி காலனி 2வதுதெரு பி. பி.ரோடிலுள்ள குழந்தைகள் காப்பகத்தில்நடைபெறுகிறது.

தொகுதி மகளிர் அமைப்பாளர்களும், வட்ட மகளிர் அமைப்பாளர்களும் தோழியர்களும் திரளாகக் கலந்துகொள்ளுமாறு டி. சகுந்தலா கேட்டுக் கொண்டுள்ளார்.

---

போலீஸ் கமிஷனர் பேட்டி

## முன்னாள் ராணுவ வீரர்கள் இரவு நேரத்தில் ரோந்து

சென்னை, பிப். 15-சென்னைநகரில் இரவு நேரங்களில் குற்றங்கள் நடைபெறாமல் இருக்கவும் பொது மக்களின் உடைமைகளைப் பாதுகாப்பதற்காகவும் முன்னாள் ராணுவத்தினர்கள் இரவு நேரங்களில் போலீசாருடன் ரோந்து சுற்றுவார்கள் என்று சென்னை நகர போலீஸ் கமிஷனர் ரங்கசாமி நிருபர்களிடம் தெரிவித்தார்.

சென்னையில் குற்றங்கள் அதிக அளவில் நடைபெறாமல் இருக்க. இரவு நேரங்களில் ரோந்துசுற்ற முன்னாள் ராணுவத்தினர் வேலைக்கு சேர்க்கப்படுவார்கள் என்று தமிழக அரசு அறிவித்திருந்தது தெரிந்ததே அதன்படி சென்னையில் முன்னாள் ராணுவத்தினர் இப்போது வேலைக்கு சேர்க்கப்பட்டுள்ளனர்.

அவர்கள் எவ்வாறு பணிபுரிவார்கள் என்பது குறித்து சென்னை நகர போலீஸ் கமிஷனர் ரங்கசாமி நிருபர்களிடம் விளக்கிக் கூறினார்,

அவர் கூறியதாவது: சென்னைநகரில் குற்றங்கள் நடைபெறாமல் இருக்க முன்னாள் ராணுவத்தினர் இரவு நேரங்களில்ரோந்து சுற்றுவதற்காக இப்போது வேலைக்கு தேர்ந்தெடுக்கப் பட்டனர். அவர்கள் அனைவரும் சென்னையில் உள்ள 150 வட்டங்களிலும் இரவு நேரங்களில் ரோந்துசுற்றுவார்கள். அவர்கள் முதலில் பழக்கப்படுவதற்காக அப்பகுதி போலீஸ் நிலையங்களில் உள்ள போலீசாருடன் இரவு நேரங்களில் அனுப்பப்படுவார்கள்.

### அடையாள கார்டு

சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் தனியாக செயல்பட ஆரம்பிப்பார்கள்.

இவர்களுக்குத் தனியாக உடை அளிக்கப்படும். போலீசாருக்குக் கொடுக்கப்பட்டுள்ள 'லத்தி'போல் இவர்களுக்கும் கொடுக்கப்படும். மேலும் அவர்களுக்கு போலீசாருக்கு கொடுக்கப்பட்டுள்ள அடையாள கார்டு போல ஒரு அடையாள அட்டையும் வழங்கப்படும்.

### இரவு ரோந்து

இவர்கள் சென்னையின் எல்லா பகுதிகளிலும் இரவு நேரங்களில் ரோந்து சுற்றி வருவார்கள்.

இவர்களுக்கு சந்தேகம் ஏற்படும் அளவில் யாராவது இரவு நேரங்களில் சுற்றிக் கொண்டிருந்தால் அவர்களைப் பிடித்து அருகில் உள்ள போலீஸ் நிலையங்களில் ஒப்படைப்பார்கள்.

இவ்வாறுஇவர்கள்இரவு நேரங்களில் ரோந்துசுற்றி வருவதால் குற்றங்கள் நடைபெறுவதைத் தடுக்க முடியும்.

இவ்வாறுகமிஷனர்ரங்கசாமி தெரிவித்தார்,

---

### கேரளா சபாநாயகராக குரியன் 4.வதுமுறையாக தேர்வு

திருவனந்தபுரம்,பிப்.16- இந்திய கம்யூனிஸ்டு கட்சியை சேர்ந்த ஏ. பி. குரியன் 4-வது முறையாக கேரள சட்டசபையின் சபாநாயகராக ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கேரள சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்கள் பதவிப்பிரமாணம் எடுத்துக்கொண்டனர். அதன் பிறகு ஏ. பி. குரியன் சபாநாயகராகதேர்ந்தெடுக்கப்பட்டார்.

அவரைக் கேரள முதலமைச்சர் இ. கே. நயினாரும், எதிர்க் கட்சித்தலைவர் கே.கருணாகரனும (இ காங்) அழைத்துச் சென்று அவர் இருக்கையில் அமர வைத்தனர். இந்த மந்திரி சபை கேரளாவில் 6-வது மந்திரி சபையாகும்.

---

### திருட்டு வழக்கில் கைதானவருக்கு தி.மு.க. எம்.பி. சர்டிபிகேட்

சென்னை, பிப். 16- சென்னை 62 வது வட்டம் பெரியமேட்டைச் சேர்ந்த திமுக நபர் திருட்டுவழக்கு ஒன்றில் கைது செய்யப்பட்டார். அவருக்கு திமுக எம்.பி. சர்டிபிகேட் கொடுத்து ஜாமீனில் எடுத்துள்ளார்.

62-வது வட்ட தி. மு. க, செயலாளர் பார்த்தசாரதியின் மகன் முரளி என்பவர் வாகினிஸ்டுடியோவில் பேப்பர் திருடியதாக கைது செய்யப்பட்டார்.

பெரியமேட் ஜி 2 காவல் நிலையத்தில் வழக்கு பதிவு செய்யப்பட்டது.

தி. மு. க., எம். பி. கலாநிதி கைது செய்யப்பட்டவருக்கு மருத்துவச் சான்றிதழ் வழங்கி ஜாமீனில் எடுத்துள்ளார்.

---

### பம்பாய் கழகத் தோழர்கள் நாவலருடன் சந்திப்பு

சென்னை, பிப். 16- பம்பாய் கழகத் தோழர்கள் அவைத்தலைவர் கே. அப்துல்ரகிமான் தலைமையில் தேனி எஸ். ராமச்சந்திரன், சஞ்சீவக்முருகன், கருணாநிதி, ரவீந்திரன், சுப்பிரமணியன், பெருமாள், சி. ராஜ், வாமன் ராமசுவாமி, கந்தசாமி, லோகநாதன் ஆகியோர் பம்பாய் கழக வளர்ச்சி குறித்து பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர், அமைப்புச் செயலாளர் டாக்டர் ஹண்டே இலட்சிய நடிகர் ஆகியோரைச் சந்தித்து அறிவுரை பெற்றனர். பின்னர் அவர்கள் அண்ணா சதுக்கத்திற்கு சென்று மரியாதை செலுத்தினர்.

---

## ஜனாதிபதி கேள்வியும் - கருணாநிதி திணறலும்

குடியரசுத் தலைவர் ஜனாதிபதி, நேற்று காலை சென்னை வந்தார்

அவரை வரவேற்கச் சென்ற கருணாநிதியார் புரட்சித்தலைவர்மீது 'ஊழல் புகார்'களைக் கூறி ஒரு பட்டியலைக் கொடுத்திருக்கிறார்.

அப்போதே ஜனாதிபதிக்குச் சிரிப்பு வந்திருக்க வேண்டும்!

காரணம், அடுத்தவர்மீது ஊழல் புகார்களைகருணாநிதி கூறுவது இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தமாஷ் அல்லவா?

போனால் போகிறது என்று எதிர்க்கட்சித் தலைவராயிற்றே என்ற மரியாதைக்காக கருணாநிதி கொடுத்த காகிதங்களை வாங்கி வைத்துக்கொண்டார் குடியரசுத் தலைவர்.

ஆனால், அந்த மரியாதை கருணாநிதிக்குத் தெரியாது. அந்தச் சொல்லுக்கும் அவருக்கும் சம்பந்தமும் கிடையாது.

இடையிலே கிடைத்த மரியாதையை அவர் இழந்து ஏகப்பட்ட நாட்களாகி விட்டன.

மரியாதை தெரியாத காரணத்தால்தான் விமான நிலையத்தில், ஒரு வழிப்போக்கரைச் சந்திப்பது போல் ஜனாதிபதியைச் சந்தித்து 'ஊழல் புகார்' கொடுத்திருக்கிறார் கருணாநிதியார்.

கருணாநிதி கொடுத்த காகிதங்களை வாங்கிக் கொண்ட ஜனாதிபதி கருணாநிதியைப் பார்த்துக் கேட்டார்:

"இந்தப் புகார்களை மாநில அரசிடம் கொடுத்து விட்டீர்களா?"

-கருணாநிதி முகத்தில் அசடு வழிந்தது. என்ன பதில் சொல்வது என்று திணறினார்.

"இல்லை... இனிமேல்தான் கொடுக்கப் போகிறோம்!" என்றாராம் தட்டுத்தடுமாறி.

ஒரு மாநில அரசு மீது ஊழல் புகார் கொடுத்தால் அதை முதலில் மாநில அரசிடம் கொடுத்து விட்டு அப்புறம்தான் ஜனாதிபதியிடம் கொடுக்க வேண்டும் என்பது நடைமுறை.

இந்த சாதாரண நடைமுறை கூடத் தெரியாத ஒருவர்தான் இந்த மாநிலத்தில் ஏழாண்டுக்காலம் முதலமைச்சராக இருந்திருக்கிறார்.

1973 ஆம் ஆண்டில் கருணாநிதியின் அரசு மீது புரட்சித்தலைவர் ஊழல் புகார் கொடுத்தார்.

அப்போது இந்த நடைமுறை பின்பற்றப் பட்டது. முதலில் தமிழக கவர்னரிடமும், அப்புறம் குடியரசுத் தலைவரிடமும் ஊழல் புகார் கொடுக்கப் பட்டது.

ஊழல்களை எப்படிச் செய்வது என்று மட்டும்தானே கருணாநிதி கற்றுவைத்திருக்கிறார்!

# அண்ணா

சந்தா விவரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடச் சந்தா தொகை | ரூ. | 130 |
| 6 | மாதச் சந்தா தொகை | ரூ. | 65 |
| 3 | மாதச் சந்தா தொகை | ரூ. | 32-50 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி:
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-6000 014



'மனைவி உருவாகிறாள்' படத்தில் சிவச்சந்திரன், சதயகலா

## ஒரு வெள்ளாடு வேங்கையாகிறது!

குடியினால் விளையும் தீங்கை அழுத்தமாக மனதில் பதியும் வகையில் சித்தரிக்கும் வலுவான கருத்துள்ள கதை. வேங்கையின் பாய்ச்சல் போல் வேகமும் விறு விறுப்பும் உள்ள திரைக்கதையமைப்பில் 'வீர'மும் விவேகமும் தெரிகிறது!

கோடையிடியாய்... சாட்டையடியாய் ஒலிக்கும் கிருஷ்ணாவின் 'அனல்' உரையாடல்கள் பாராட்டும்படி உள்ளன.

காதலைத் தெரிவிக்க சிவகுமார் தவிக்கும் தவிப்பு வெடி சிரிப்பை எழுப்பும்! அந்த அப்பாவித்தனம், குறும்பு அமர்க்களம்!

விஜயகுமாருக்கு பொருத்தமான வேடத்தைத் தந்து எடுபட வைத்துள்ளனர்.

## எக்ஸ்ரே

### சபாஷ் சரிதா

வெள்ளாடாக அமைதியாகவரும்போதும் தன்னை பலிகொள்ளத் துடிக்கும் குடிகாரனிடம் சவால் விட்டு வேங்கையாகும் போதும் சரிதா நம்மை சபாஷ் போட வைக்கிறார்!

பூர்ணம் விசுவநாதன், அசோகன், தேங்காய் சீனிவாசன், வனிதா, சுந்தரிபாய் ஆகியோர் பொருத்தமாகச் செய்துள்ளனர்.

இசையும், ஒளிப்பதிவும் செவிகளுக்கும், கண்களுக்கும் விருந்து படைக்கின்றன.

குழப்பமின்றி தெளிவாக விறுவிறுப்பாக தேவராஜ் மோகன் இயக்கியுள்ளனர்.

இந்தப் படத்தில், சொர்ணமுகியின் நடனம் சிறப்பு அம்சம்! குன்னக்குடி வைத்தியநாதனின் இசைமழையும் சேர்ந்து கொண்டு திக்குமுக்காட வைக்கிறது.

மொத்தத்தில்-

**வேங்கைகளை வெள்ளாடு ஆக்காமல் தடுக்கும் படம்!**

## சௌந்தர்யமே வருக வருக!

விண்ணைத்தொட முயற்சிக்கும் பல மாடிக் கட்டிடங்கள், ஆடம்பரம்,

## நாகை தருமன்

அழகு யாவும் நிறைந்த அமெரிக்க மண்ணில் முழுமையாக படப்பிடிப்பை நடத்தி அங்குள்ள "சௌந்தர்யத்தை வருக வருக" என்று தனது படத்தின் மூலம் ஸ்ரீதர் அழைத்து வந்துள்ளார்.

அமெரிக்காவில் படம் எடுக்க வேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட கதை, கதையின் வலுவைவிட வெளிநாட்டு காட்சிகளை படமாக்குவதிலேயே ஸ்ரீதர் கவனம் செலுத்தியுள்ளார்.

சிவச்சந்திரன் சண்டைக் காட்சிகளில் நன்கு எடுபடுகிறார். ஸ்ரீபிரியா கவர்ச்சியாக காதல் காட்சிகளில இணைந்து நடித்துள்ளார்.

பிரகாஷ் நன்றாக நடனமாடுகிறார். ரதி அழகாக வருகிறார். சத்தார் சரியான வில்லன்!

திவாரியின் ஒளிப்பதிவும், விஜயபாஸ்கரின் இசையும் படத்திற்கு உற்சாகம்!

பொழுது போக்கு அம்சங்கள் நிறைந்த படம்! சண்டைக் காட்சிகளை, காதல்காட்சிகளை ஸ்ரீதர் அருமையாகப் படமாக்கியுள்ளார்.



'அன்னப்பறவை' படத்தில் ராதிகா.

## தயாரிப்பாளர் நடிக்கிறார்

வடபழனி பிலிம்சாரின் 'அன்னப்பறவை' வண்ணப்படத்தின் தயாரிப்பாளர் மகாதேவன் முக்கிய வேடம் ஒன்றில் நடித்துள்ளார். அவர் நடித்த காட்சிகள் ஊட்டியில் படமாக்கப்பட்டன.

வருகிற மார்ச் மாதம் முதல் வாரத்தில் வெளிவர இருக்கின்ற இந்தப்படத்தில் லதா, ஸ்ரீகாந்த், சுதாகர், ராதிகா, ராமகிருஷ்ணா, சுருளிராஜன் மற்றும் பலர் நடிக்கின்றனர்.

புதுமையான கதையமைப்பைக் கொண்ட இதில் லதா இளம்தாய் வேடத்தில் முதன் முதலாக நடிக்கிறார்.

கலைமணி கதைவசனம் எழுதுகிறார். டி.ராமானுஜம் இசையமைக்கிறார். மகாதேவன் தயாரிக்கிறார்.

பட்டாபிராமன் டைரக்ட் செய்கிறார்.

## ஸ்டுடியோ யாத்திரை

"ஸ்டுடியோக்களில் படப்பிடிப்புகள் நடக்கின்றன" என்ற செய்தி வலுவாகக் காதில் விழுந்தது.

'அதிசயம்.... ஆனால் ... உண்மை! இச்சமயம் தவறினால் மறு சமயம் வாய்ப்பது' என்று பல நாட்களுக்குப் பிறகு கோடம்பாக்கம் திருநகரை நோக்கி விரைந்தேன்!

படத்தின் துவக்கவிழா-பாடல்பதிவு-இசைசேர்ப்பு-எடிட்டிங் இவைகளுக்கு மட்டும் தான் பெரும்பாலான ஸ்டுடியோக்கள் பயன்பட்டு வருகின்றன.

படப்பிடிப்பு அரங்குகளைப் பயன்படுத்துவது மிகவும் குறைந்துவிட்டது. படம் தயாரிக்க வேண்டும் என்று எண்ணும்போதே எந்த ஊரில் என்றுதான் யோசிக்கிறார்களே தவிர எந்த ஸ்டுடியோவில் என்று நினைத்துக்கூடப் பார்ப்பதில்லை.

கிராமங்களுக்கும், வெளி நாடுகளுக்கும், சென்னையில் பங்களாக்களுக்கும் அப்படி ஒரு யோகம் அடித்திருக்கிறது! ஆகையால்தான் ஸ்டுடியோக்களில் உள்ள அரங்குகளில் பலவற்றில் படப்பிடிப்பு நடப்பதே அரிதாக இருக்கிறது.

'இந்த போகமும் வேகமும் எத்தனை நாளைக்கு- என்னிடம் தான திரும்பி வர வேண்டும்' என்பது போல் ஸ்டுடியோ அரங்குகள் காத்திருக்கின்றன.

இந்த சீசனிலும் ஸ்டுடியோ அரங்குகளில் படம் எடுக்கின்றவர்களும் இருக்கிறார்கள். அப்படி எடுக்க வேண்டிய அவசியமும் ஏற்படுகின்றது.

ஏவி.எம்.ஸ்டுடியோவில் 'தேன் சிட்டுகள்' பாடல் காட்சி படமாக்கப்பட்டுக் கொண்டிருந்தது.

பிரம்மாண்டமான அரங்கில் நடனமாடும் உடையில் சுபாஷிணியும், ஆணவத்தோடு சதிஸ்ரீயும், அலங்கார உடையோடு, வண்ண முடியோடு பிரகாஷும் காட்சியளித்தனர்.

நடனமாடுவதும், மூவ்மெண்ட் கொடுப்பதும் சிலரால்தான் முடியும்- அழகாக அமையும்.

இப்போது வந்துள்ள இளம் தலைமுறை நடிகர்களில் பிரகாஷிடம் நல்ல வேகமும் சுறுசுறுப்பும் இருக்கிறது- நடனத்திலும் தான்! நடிப்பிலும் அப்படி இருந்தால் இன்னும் சிறப்பாக இருக்கும்.

பெரும் பொருட்செலவில் 'தேன் சிட்டுகளை' பி. எஸ். பாண்டியன் தயாரிக்கிறார்.

கிளைமாக்ஸ் காட்சிகளையும், இந்த நடனக் காட்சியையும் மட்டும் காணன் படமாக்குகிறார் என்று பாண்டியன் கூறினார்.

தாமோதரன் டைரக்ட் செய்கிறார். குருசாமி கதை வசனம் எழுதுகிறார்.

அங்கிருந்து சாரதா ஸ்டுடியோவிற்குச் சென்றேன்.

ஆர்ட் கிரியேஷன்ஸ் 'வலம்புரிச்சங்கு' படத்திற்கு 'ரீரிக்கார்டிங்' செய்து கொண்டிருந்தார் இசையமைப்பாளர் + பாடல் ஆசிரியர் கங்கை அமரன்!

டைரக்டர் பானுதாசன். அசோசியேட் டைரக்டர் பழனியப்பன், தயாரிப்பாளர்கள் சண்முகவேல், சந்திரசேகர் ஆகியோர் உடனிருந்தனர்.

கங்கை அமரனின் வாயைக் கிண்டினேன். பல சுவையான தகவல்கள் கிடைத்தன.

அண்மையில் ஜப்பான் செல்வதற்கு இளையராஜா திட்டமிட்டிருந்தாராம், அங்கே சில புதிய இசைக் கருவிகள் இருப்பதை அறிந்து அவைகளை வாங்குவதற்காக அங்கு செல்வதற்கு திட்டமிட்டிருந்தார். ஆனால் இங்கு அதிகமாக வேலையிருந்ததால் போக முடியவில்லை.

இந்தியாவிலேயே வேறு யாரிடமும் இல்லாத வகையில் பல புதிய இசைக்கருவிகளை வைத்திருப்பது, அதற்காக மிக அதிகமாகச் செலவு செய்வது இளையராஜாதான்! மிக அதிகமான இசைக் கருவிகளை வைத்திருப்பது அவர்தான்!

இந்தத் தகவல்களைச் சொன்னவர் இளையராஜாவின் இளையவர் கங்கை அமரன்!

'வலம்புரிச்சங்கு' படத்தின் ரீரிக்கார்டிங்கில் பல புதுமைகளைச் செய்ய இருப்பதாக டைரக்டர் பானுதாசன் கூறினார்.

"மீனவர்கள் கடலில் கட்டுமரத்தில் போகும் போது பாடுகின்ற பல பாடல்களை, அவர்களையே பாடச் செய்து ஒலிப்பதிவு செய்துள்ளோம். அவற்றைப் படத்தில் முக்கியமான காட்சிகளில் இடம் பெறச் செய்வோம்.



## விபத்தில் ரஜினி உயிர் தப்பினார்

திருச்சி அருகில் திருமங்கலம் கிராமத்தில் கலிங்கி என்ற இடத்தில் காவிரி ஆற்றிலிருந்து ஒரு துணை ஆறு பிரிந்துவரும் இடத்தில் 'செவ்வந்தி' படத்திற்கான காட்சிகள் படமாக்கப்பட்டன.

நடிகை ரஜினியும் புதுமுகம் சியாமளாவும் சம்பந்தப்பட்ட காட்சிகள் அங்கு எடுக்கப் பட்டன.

காட்சி படமாக்கப்பட்டதும் செவ்வந்தியாக நடித்த செல்வி ரஜினி தண்ணீரில் நடந்து வந்த போது கால் வழுக்கி அப்படியே மூழ்கி விட்டார்.

எதிர்பாராத விதமாக இப்படி நடந்ததைக் கண்டதும் டைரக்டர் பாப்ஜியும், மற்றவர்களும் திகைத்து நின்றுவிட்டனர்.

அசோசியேட் டைரக்டர் சீனிவாசன், ஒளிப்பதிவாளர் மன்னர் மன்னன், இருவரும் தண்ணீரில் குதித்து ரஜினியைக் காப்பாற்றி கரைக்குத் தூக்கிக் கொண்டு வந்தனர். அவரைத் தலைகீழாகப் பிடித்துத் தண்ணீரை வெளியேற்றி, முதலுதவி செய்தனர்.

ரஜினி கண்விழித்துப் பார்த்தபோது தான் அனைவருக்கும் உற்சாகம் வந்தது. எப்படியோ ரஜினி தப்பிப் பிழைத்தார் என்று நிம்மதியாகப் பெருமூச்சு விட்டனர்.

விஜயன், சந்திரஹாசன், நளினிகாந்த், சுப்பையா, ஸ்ரீலேகா, சியாமளா, ராஜபிரியா, பவானிஸ்ரீ, பேபி சாந்தி, சுகந்தி ஆகியோர் நடிக்கின்றனர்.

மாந்துறை பாபுஜி கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார். கங்கை அமரன் இசையமைக்கிறார். ஏ. ஆர் ராஜு தயாரிக்கிறார்.

## கதாசிரியர் டைரக்டர் ஆனார்

'கன்னிப் பருவத்திலே' படத்திற்கு கதை எழுதிய வைரவன் 'பாக்கு வெத்திலை' என்ற பெயருள்ள ஒரு வண்ணப்படத்திற்குக் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்.

புதுமுகம் ராஜா விஜயகீதா, சொர்ணலதா, ஸ்ரீலதா, லூஸ்மோகன் ஆகியோர் நடிக்கின்றனர். புலவர் மாரி, வைரவன் பாடல்களை எழுதுகின்றனர்.

எஸ். சம்சுதீன் தயாரிக்கிறார்.

## சித்திரப் பூக்கள்

பட்டாச்செல்வி பட நிறுவனத்தினர் 'சித்திரப் பூக்கள்' எனும் வண்ணப் படத்தைத் தயாரிக்கின்றனர்.

ராஜேஷ், சரோஜா, எம். எஸ். வசந்தி, பி. கே. இளங்கோவன் காந்திமதி, தங்கவேலு, சுருளிராஜன் ஆகியோர் நடிக்கின்றனர்.

ராஜா ஒளிப்பதிவைக் கவனிக்கிறார். சங்கர் கணேஷ் இசையமைக்கிறார். ராமன், பெருமாள் தயாரிக்கின்றனர். டி.எஸ். ரெட்டி டைரக்ட் செய்கிறார்.

## விஜயன் சுமதி நடிக்கும் படம்

சுவாமி எண்டர்பிரைசஸ் என்ற புதிய பட நிறுவனத்தினர் வண்ணப் படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்.

இந்தப் படத்தில் விஜயன், சுமதி, கவுண்டமணி மனோரமா, ஜமீன்யர் பாலையா ஆகியோர் நடிக்கின்றனர்.

அய்க்கண் எழுதிய கதைக்கு திரைக் கதை அமைத்து எஸ். ஜியாவுதீன் டைரக்ட் செய்கிறார். வெளிப்புறத்திலேயே 25 நாட்களில் படப்பிடிப்பை முடிக்கத் திட்டமிட்டுள்ளனர். பெஞ்சமின் ஒளிப்பதிவு செய்கிறார்.

## உணவுக்கழக ஆண்டு விழா

இந்திய உணவுக் கழக ஆண்டு விழா குசலாம்பாள் திருமண மண்டபத்தில் நடைபெற்றது.

பி. எல். சிவராம் தலைமை வகித்தார். அவருடைய துணைவியார் பரிசுகளை வழங்கினார். ஏ. ஆர். சுந்தரவரதன் மலரை வெளியிட்டார். பிச்சமுத்து, தாமோதரன், பக்கிரிசாமி ஆகியோர் உரையாற்றினர். பத்மா சுப்ரமணியம் நடனம் நடைபெற்றது.



'வறுமையின் நிறம் சிகப்பு' படத்தில் கமல்ஹாசன், ஸ்ரீதேவி

## சல்லிகள் துள்ளும்

"வெற்றி வரும் போது தான் அடக்கமாக இருக்க வேண்டும். சாதாரண வெற்றி என்றால் கூட சில சல்லிகள் துள்ள ஆரம்பித்துவிடும். அப்படியில்லாமல் 'கல்யாண ராமன்' வெள்ளி விழாப் படத்தையும் 'ஆறிலிருந்து அறுபது வரை' நூறுநாள் படத்தையும் தந்தபிறகும் அடக்கமாக அமைதியாக இருக்கும் பஞ்சு அருணாசலத்தைப் பாராட்டுகிறேன்.

விமர்சனமாக எதை எழுதினாலும் தாங்கிக் கொள்ளும் மனவலிமை உள்ளவர் எஸ்.பி.முத்துராமன் தான்."

--சோ

## மகேந்திரன் பண்பு

'ஆறிலிருந்து அறுபது வரை' நூறாவது நாள் விழாவில் முன் வரிசையில் டைரக்டர் மகேந்திரன் அமர்ந்திருந்தார். 'சோ' வந்து பின் வரிசையில் உட்கார்ந்தார். அதைக் கண்டதும் மகேந்திரன் அவரை முன் வரிசையில் அமரும்படி எழுந்து நின்று அழைத்தார். 'சோ' அதற்கு சம்மதியாததால் மகேந்திரன் எழுந்து சென்று அவருக்குப் பின்வரிசையில அமர்ந்து கொண்டார். பேசும் போது 'தான் பத்திரிகைத் துறையிலும், சினிமாவிலும் ஏதாவது அறிந்திருந்தால் அதற்கு 'துக்ளக்' ஆசிரியர் 'சோ' தான் காரணம். தான் ஒரு பத்திரிகையாளன் தான்' என்று பெருமிதத்துடன் குறிப்பிட்டார்.



'ரதி' படத்தில் ராஜேஸ், வனிதாஸ்ரீ

## சிகப்புவிளக்கு வீட்டில் சிக்கித் தவிக்கும் சிங்காரி

காலையில் எழுந்ததும் தாலியை எடுத்துக் கண்களில்ஒற்றிக் கொள்வதையும், தெய்வங்களுக்கு பூஜை செய்து பக்தையாகக் காட்சியளிப்பதையும் கண்டால் தனலட்சுமியைப் போல் ஒரு மாதர் குல மாணிக்கத்தைப் பார்ப்பது அரிது என்று தான் தோன்றும்! ஆனால் அவள் செய்கைகளுக்கும் உண்மைக்கும் சம்பந்தமே இல்லை.

தாலியைக் கண்களில் ஒற்றிக் கொள்கிற அவள், கணவனை மூலையில் ஒரு பிச்சைக்காரனைப் போல் உட்கார வைத்திருந்தாள். அவன் இருப்பதால் தான் அந்தத் தாலி இருக்கிறது. அதற்காகவாவது அவனைக் கவனித்துத் தொலைக்கவேண்டுமென்ற கவலை கூட படாதவள்,

தெய்வங்களை வலம் வந்து பூஜை செய்யும் அவள்- ஒரு வீட்டில்குடும்ப விளக்காக விளங்க வேண்டிய தன் மகள் மாதவியை பலருக்கு மஞ்சத்தில் சுகம் தரும் சிகப்பு விளக்காக வைத்திருந்தாள்.

தான் பட்டாடையும் நகையும் பூண்டு பகட்டாக வாழ மகளை பலிகடாவாக்கியிருந்தாள்.

யாருக்காவது இரண்டாவது தாரமாகவாவது வாழ்க்கைப்பட மாதவி துடிக்கிறாள். வருமானம் வராது என்பதால் மகள் மானத்தையே தாய் விலை கூறிக் கொண்டிருந்தாள்.

இப்படி ஒரு தாய் இருப்பாளா என்று கேட்காதீர்கள். நாத்திகம் பிக்சர்ஸ் 'மாதவி வந்தாள்' படத்தில் இதுபோன்ற தாயாக காந்திமதியும் பெருமூச்சின் இருப்பிடமான மகளாக ராஜியும் தந்தையாக எஸ். என். கிருஷ்ணனும் வயிற்றுப் பாட்டுக்காக இந்தச் சாக்கடையில் வாழும் வேலைக்காரியாக சச்சுவும், மைனராக சுப்பையாவும் நடித்தனர்.

நாத்திகம் ராமசாமி கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார். தத் ஒளிப்பதிவை கவனிக்க, சந்திரபோஸ் இசையமைக்கிறார். விஜய்பாபு, ஜெயப்பிரியா, வி. கே. ராமசாமி, வெங்கட்ராமன் மற்றும் பலர் நடிக்கின்றனர்.



'மாதவி வந்தாள்' படத்தில் ராஜி.